சிவமயம்

ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய

# திருத்தொண்டத்தொகை.

ஏழாந்திருமுறை-பண்-கொல்லிக்கௌவாணம்.

அடிமை

திருச்சிற்றம்பலம்.

தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க்கடியேன்
இல்லையே யென்னாத வியற்பகைக்கு மடியேன்
இளையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டர்க் கடியேன்
அல்லிமென் முல்லையந்தா ரமர்நீதிக் கடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே (1)
இலைமலிந்த வேனம்பி யெறிபத்தர்க் கடியேன்
ஏனாதி நாதன்ற னடியார்க்கு மடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க் கடியேன்
கடவூரிற் கலையன்ற னடியார்க்கு மடியேன்
மலைமலிந்த தோள்வள்ளன் மானக்கஞ் சாறன்
எஞ்சாத வாட்டாய னடியார்க்கு மடியேன்
அலைமலிந்த புனன்மங்கை யானயர்க்கடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே (2)
மும்மையா லுலகாண்ட மூர்த்திக்கு மடியேன்
முருகனுக்கு முருத்திர பசுபதிக்கு மடியேன்
செம்மையே திருநாளைப் போவார்க்கு மடியேன்
திருக்குறிப்புத் தொண்டர்தம் மடியார்க்கு மடியேன்
மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினா லெறிந்த
அம்மையா னடிச்சண்டிப் பெருமானுக் கடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக்காளே (3)

திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
    திருநாவுக் கரையன்ற னடியார்க்கு மடியேன்
பெருநம்பி குலச்சிறைத னடியார்க்கு மடியேன்
    பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கு மடியேன்
ஒருநம்பி யப்பூதி யடியார்க்கு மடியேன்
    ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கர்க் கடியேன்
அருநம்பி நமிநந்தி யடியார்க்கு மடியேன்
    ஆரூர னாரூரி லம்மானுக் காளே. (4)

வம்பறா வரிவண்டு மணநாற மலரும்
    மதுமலர்நற் கொன்றையா னடியலாற் பேணா
எம்பிரான் சம்பந்த னடியார்க்கு மடியேன்
    ஏயர்கோன் கலிக்காம னடியார்க்கு மடியேன்
நம்பிரான் திருமூல னடியார்க்கு மடியேன்
    நாட்டமிகு தண்டிக்கு மூர்க்கர்க்கு மடியேன்
அம்பரான் சோமாசி மாறனுக்கு மடியேன்
    ஆரூர னாரூரி லம்மானுக் காளே. (5)

வார்கொண்ட வனமுலையா ளுமைபங்கன் கழலே
    மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கு மடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கு மடியேன்
    செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டர்க் கடியேன்
கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்க்கு மடியேன்
    கடற்காழிக் கணநாத னடியார்க்கு மடியேன்
ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக் கோனடியேன்
    ஆரூர னாரூரி லம்மானுக் காளே. (6)

பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்
    பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழற் கடியேன்
மெய்யடியா னரசிங்க முனையரையற் கடியேன்
    விரிதிரைசூழ் கடனாகை யதிபத்தர்க் கடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
    கழற்சத்தி வரிஞ்சையர்கோ னடியார்க்கு மடியேன்
ஐயடிகள் காடவர்கோ னடியார்க்கு மடியேன்
    ஆரூர னாரூரி லம்மானுக் காளே. (7)

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
    கணம்புல்ல நம்பிக்கும் காரிக்கு மடியேன்

நிறைகொண்ட சிந்தையா னெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாற னடியார்க்கு மடியேன்
துறைக்கொண்ட செம்பவள மிருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலா னடியார்க்கு மடியேன்
அறைக்கொண்ட வேனம்பி முனையடுவார்க் கடியேன்
ஆரூரா னாரூரி லம்மானுக் காளே. (8)

கடல்சூழ்ந்த வுலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்க னடியார்க்கு மடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி யிடங்கழிக்குந் தஞ்சை
மன்னவனாஞ் செருத்துணைதன் னடியார்க்கு மடியேன்
புடைசூழ்ந்த புலியதள்மே லரவாட வாடி
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கு மடியேன்
அடல்சூழ்ந்த வேனம்பி கோட்புலிக்கு மடியேன்
ஆரூரா னாரூரி லம்மானுக் காளே. (9)

பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கு மடியேன்
பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கு மடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்க ளெல்லார்க்கு மடியேன்
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கு மடியேன்
அப்பாலு மடிச்சார்ந்த வடியார்க்கு மடியேன்
ஆரூரா னாரூரி லம்மானுக் காளே. (10)

மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல்
வரிவளையாள் மானிக்கு நேசனுக்கு மடியேன்
தென்னவனா யுலகாண்ட செங்கணார்க் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
என்னவனா மரனடியே யடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் றிருநாவ லூர்க்கோன்
அன்னவனா மாரூர னடிமைகேட் டுவப்பார்
ஆரூரி லம்மானுக் கன்பரா வாரே. (11)

திருச்சிற்றம்பலம்.

திருத்தொண்டத்தொகை முற்றுப்பெற்றது.

# ஓங்காரவிளக்கத்தில் எடுத்துக்காட்டியுள்ள மந்திரசுலோகங்களின் முதற்குறிப்பு அட்டவணை.

ஓங்காரவிளக்கத்தில் எடுத்துக்காட்டியுள்ள மந்திரசுலோகங்களின்
முதற்குறிப்பு அட்டவணை முற்றுப்பெற்றது.